# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Saturday, 21st January 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

### STARRED QUESTIONS.

*Export and import of rice*

* **41** *Q.*—SRI S. M. ANNAMALAI: *கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*1960-ல் ஆந்திர மாநிலத்திலிருந்து சென்னைக்கு வந்த அரிசியும், சென்னை மாநிலத்திலிருந்து மற்ற மாநிலங்களுக்கு அனுப்பப்பட்ட அரிசியும் எவ்வளவு?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM: According to the statistics collected by this Government, a total quantity of 84,600 tons (roundly) of paddy and rice moved into this State between January and October 1960 from the Andhra Pradesh, while a quantity of 328,000 tons (roundly) moved from this State to Kerala during the same period.

**SRI S. M. ANNAMALAI:** *பிற மாகாணங்களில் இருந்தும், ஆந்திரா மாகாணத்திலிருந்தும் நம் மாகாணத்திற்கு அரிசி வந்திருந்தும், ஏன் விலைவாசி விஷம்போல் ஏறிக்கொண்டே போகிறது? இதைத் தடுக்க அரசாங்கம் முன்வருமா?*

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** *விலைவாசி ஏறுவதற்கு எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. இதைப்பற்றி பொருளாதார நிபுணர்கள் ஆராய்ந்து வருகின்றனர். அவர்களின் யோசனையின் பேரில் நடவடிக்கை எடுக்கப்படும். நம் மாகாணத்தில் தேவைக்கு மேலும் உற்பத்தியாகிக்கொண்டுதான் இருக்கிறது. ஆகவேதான் கேரளாவிற்கு 3 லட்சம் டன் அரிசி கொடுத்து வருகிறோம்.*

**SRI V. K. KOTHANDARAMAN:** *விலைவாசி உயர்விற்கு பிரதான காரணம் பதுக்கல்தான் என்று ஆராய்ச்சி செய்த நிபுணர்கள் கூறுகிறார்கள். இதைத் தடுப்பதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டது?*

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** *நான் உறுதியாகச் சொல்வேன் நம் மாகாணத்தில் பதுக்கல் இருக்கிறதென்று சொல்வதற்கு இடமில்லை என்று. இங்கு விலை கட்டுப்பாடு ஒன்றும் இல்லை. விலை உயர்வு ஓரளவு குறைந்துக் கொண்டு வருகிறது.*